மணி 48 இதழ் 190

NAVAMANI (Tamil Daily) MADRAS.

REGD NO M 7397.

Phone No. 76190—76199

4 பக்கம் 15 காசு விமானப் பதிப்பு 18 காசு



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 21—4—73 சனி வெளியூர் 22—4—73 ஞாயிறு



# திண்டுக்கல்லில் தேர்தல் பிரசாரம் சூடுபிடிக்கிறது

(நவமணி செய்தியாளர்)

திண்டுக்கல், ஏப். 21—திண்டுக்கல் மக்கள்சபைத் தொகுதியில் தேர்தல் பிரசாரம் சூடுபிடித்து இங்கு போட்டியிடும் கட்சிகளில் பழைய காங்கிரஸ், தி. மு. க., மார்க்சிஸ்ட், அண்ணா தி. மு. க. ஆகிய நான்கு கட்சிகளும் தீவிர தேர்தல் பிரசாரம் நடத்திவருகின்றன.

இந்திரா காங்கிரஸ் கட்சி போட்டியிடுவதென்று தீர்மானிக்கப்பட்டு வேட்பாளரின் பெயரும் அறிவிக்கப்பட்டுவிட்டது. [illegible] கட்சியும் தீவிர தேர்தல்பிரசாரத்தில் ஈடுபடும்.

இங்கு போட்டியிடும் 5 கட்சிகளில் தி.மு.கழகம், இந்திரா காங்கிரஸ், மார்க்சிஸ்ட் ஆகிய 3 கட்சிகளும் தமது வேட்பாளர்களின் பெயர்களை அறிவித்துவிட்டன.

தி.மு.க. சார்பில் பொன் முத்துராமலிங்கம் போட்டியிடுகிறார்; இந்திரா காங்கிரஸ் சார்பில் சீமைச்சாமி நிறுத்தப்பட்டுள்ளார்.

மார்க்சிஸ் கட்சி சார்பில் சங்கரய்யா நிற்கிறார்.

பழைய காங்கிரஸ் கட்சி வேட்பாளரின் பெயர் 23-ந் தேதி அறிவிக்கப்படலாம் என்று சென்னையில் தமிழ்நாடு பழைய காங்கிரஸ் கமிட்டித் தலைவர் பி. ராமச்சந்திரன் அறிவித்துள்ளார்.

அண்ணா தி. மு. க. வேட்பாளரின் பெயர் இன்னும் 2 நாளில் அறிவிக்கப்படும் என்று எம். ஜி. ஆர். அறிவித்துள்ளார்.

வேட்பு மனு தாக்கல் செய்வதற்கு கடைசி தினமான 25-ந் தேதி நெருங்கிவரும் இச்சமயத்தில் திண்டுக்கல்லில் தேர்தல் பிரசாரம் சூடுபிடித்து வருகிறது.

## மார்க்சிஸ்ட்

முதன்முதலில் வேட்பாளர் பெயரை அறிவித்தது மார்க்சிஸ்ட் கட்சியே ஆகும். இக்கட்சி எந்தக்கட்சியுடனும் கூட்டுச் சேராமல் தனித்துப் போட்டியிடுகிறது. ஏப்ரல் 8, 9 ஆகிய தேதிகளில் இக் கட்சியின் தமிழ் மாநில செயற்குழு கூடி தேர்தல் அறிக்கையை வெளியிட்டு சங்கரய்யாவின் பெயரை அறிவித்தது. அதன் பின்னர் அக்கட்சியினர் பிரச்சாரப் பொதுக் கூட்டங்களை நடத்திவிளம்பர சுவரொட்டிகளை எழுதியும் பானர்களை கட்டியும் "என். சங்கரய்யாவிற்கு வாக்களியுங்கள்" என்று விளம்பரம் செய்து வருகிறார்கள்.

இதுவரை நடைபெற்ற பிரச்சாரப் பொதுக் கூட்டங்களில் பி. ராமமூர்த்தி, ஆர். உமாநாத், எ. பாலசுப்ரமணியம் வேட்பாளர் என். சங்கரய்யா, என். வரதராஜன், எஸ். ஏ. தங்கராஜன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

வெளி மாநில மார்க்சிஸ்டு தலைவர்கள் பி. டி. ரணதிவே போன்ற தலைவர்கள் வர இருக்கிறார்கள்.

## பழைய காங்கிரஸ்

இடைத்தேர்தலில் போட்டியிடும் பழைய காங்கிரஸ் வேட்பாளர் யார் என்று அறிவிக்கப்படவில்லை என்றாலும் அவர்கள் தீவிரப்பிரச்சாரத்தில் ஈடுபட்டுவருகின்றனர்.

"ராட்டை சின்னத்தை மறவாதீர்கள்" என்று அச்சடிக்கப்பட்ட பானர்கள் நகர்முழுவதும் கட்டப்பட்டுள்ளன.

அவர்களும் தீவிர தேர்தல் பிரசார பொதுக்கூட்டங்களை நடத்திவருகிறார்கள்.

## காமராஜ்

கடந்த ஒரு மாதத்திற்கு முன் காமராஜ் திண்டுக்கல் வட்டாரங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து பழைய காங்கிரசுக்கு ஆதரவு கேட்டுச் சென்றார்.

அதன் பின்னர் பழைய காங்கிரஸ் கட்சியின் சார்பாக மாபெரும் பேரணி ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடத்தினார்கள். ராஜாராம் நாயுடு சட்டமன்ற உறுப்பினர் ஆர். பொன்னப்ப நாடார் ப. நெடுமாறன் ரமணிபாய் ஆகியோர் பொதுக் கூட்டங்களில் பேசினர்.

சட்டமன்ற உறுப்பினர் ஓ. என். சுந்தரம் நகர பழைய காங்கிரஸ் கட்சியின் தலைவர் பி. சுப்பையா செயலாளர் எம். வீரையா, எம். கே. டி. சுப்பிரமணியம் ஆகியோர் தீவிரப்பிரசாரம் நடத்தி வருகின்றனர்.

## அ. தி. மு. க.

இந்தத்தேர்தலில் போட்டியிடும் அ தி மு கழகத்தின் வேட்பாளர் யார் என்று இன்னும் அறிவிக்கப்படவில்லை என்றாலும் தேர்தல் பிரச்சாரம் தீவிரமாக நடந்துவருகிறது.

"எங்கள் ஓட்டு அண்ணா தி. மு. க. வுக்கே" என்று விளம்பரத்தைச் சுவர்களிலே எழுதி விளம்பரம் செய்து வருகிறார்கள்.

இதுவரை நகரத்தில் மற்றக் கட்சிகளைவிட அ. தி. மு. கழகம்தான் அதிக கூட்டங்கள் போட்டு பிரச்சாரம் செய்துவருகிறது.

இதுவரை நடைபெற்ற கூட்டங்களில் கே. ஆர். பி. மணிமொழியன், பி. டி. சரஸ்வதி, கொடைக்கானல் மேத்தா தமிழ்செல்வன் ஆர். கே. ஷண்முகம் மாயத்தேவர் மற்றும் நகர மன்ற உறுப்பினர்கள் அ. தங்கவேலு, கனி அம்மாள், அ. தி. மு. க பிரமுகர்கள் ஊழியர்கள் கலந்துகொண்டு பேசினர்.

## தி. மு. கழகம்

இந்த தேர்தலில் ஆளும் கட்சியான திராவிட முன்னேற்ற கழகத்தின் வேட்பாளராக பொன். முத்துராமலிங்கம் போட்டியிடுகிறார்.

இவருக்கு ஆதரவு கொடுக்கும்படி நகரத்தில் "எங்கள் ஓட்டு உதயசூரியனுக்கே" "மறவாதீர் உதயசூரியனை" என்ற வாசகங்கள் உள்ள பானர்கள் கட்டப்பட்டுள்ளன. விளம்பர சுவரொட்டிகள் ஒட்டப்பட்டுள்ளன.

தி. மு. கழக தேர்தல் அலுவலகத்தை அமைச்சர்நெடுஞ்செழியன் திறந்துவைத்தார். அமைச்சர்கள் மாதவன், சாதிக்பாட்சா, ஓ.பி. ராமன், ப. உ. சண்முகம், க. அன்பழகன், மதுரை முத்து ஆகியோர் தேர்தல் பிரசாரக்கூட்டங்களில் பேசினர். நகரமன்ற தலைவர் பொன். சீனிவாசன் நகரமன்ற உறுப்பினர்கள் வி. சமதர்மம், கே. ஜி. அந்தோணி, . கோவிந்தசாமி, கருப்புச்சாமி, வரதராசன், வட்டச் செயலாளர் மு. காதர்சா ஆகியோர் தேர்தல் பிரச்சார பொதுக்கூட்டங்கள் நடத்தி வருகின்றனர்.

தேர்தல் நாள் நெருங்க பிரச்சாரமும் சூடுபிடித்து வருகிறது. நகரத்தில் பொதுக்கூட்டம் நடைபெறாத நாட்களே இல்லை. விளம்பர சுவரொட்டிகள் ஒட்டுவதும் எழுதுவதும் பானர்கள் கட்டுவதிலும் அந்தஅந்த கட்சிகள் தீவிரமாக செயல்பட்டுவருகின்றன. தார்ரோடுகள் மதில் சுவர்கள். வீட்டின் சுவர்கள் போன்ற இடங்களில் சின்னங்கள் வரைவதும் வாசகங்களை எழுதுவதுமாக இருக்கிறார்கள்.

கருணாநிதி, காமராசர், எம். ஜி. ஆர், மற்றும் நாடாளு மன்ற உறுப்பினர்கள், சட்ட மன்ற உறுப்பினர்கள் ஆகியோர் வர இருக்கிறார்கள். அப்போது தேர்தல் பிரச்சாரம் மேலும் தீவிரமடையும்.

# சேலத்தில் பயங்கர தீ விபத்து

சேலம், ஏப். 21—சேலத்தில் ஏற்பட்ட ஒரு பயங்கர தீவிபத்தில் இருபது வயது இளைஞர் ஒருவர் கருகி மரணமடைந்தார். ரூ. 2 லட்சத்திற்கு மேற்பட்ட மதிப்புள்ள பொருள்கள் சாம்பலாயின.

பஸ்நிலையம் அருகிலுள்ள ஒரு கடையில் இந்தத் தீ விபத்து ஏற்பட்டது. உடனே தீயணைப்புப் படையினர் விரைந்து வந்து போராடி தீயை அணைத்தனர்.

தீ பரவியதால் மேலும் 13 கடைகளுக்குச் சேதம் ஏற்பட்டது.

# தூக்குப் போட்டு கைதி தற்கொலை

சென்னை, ஏப். 21—சென்னை கீழ்ப்பாக்கம் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் வைக்கப்பட்டிருந்த பேயாண்டித் தேவர் என்னும் 45 வயது விசாரணை கைதி தூக்குப் போட்டுக் கொண்டு தற்கொலை செய்து கொண்டார்.

அவர்மீது ஒரு கொலை வழக்கு நடைபெற்றுக்கொண்டிருந்தது, விசாரணையின்போது அவருக்கு மூளை சரியில்லை என்று தெரியவந்ததால் கடந்த நவம்பரில் அவர் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார்.



சென்னையில் கடந்த 19-ந் தேதி நடைபெற்ற இளங்கோவடிகள் விழாவில் முதலமைச்சர் கருணாநிதி உரையாற்றுகிறார். அப்போது டாக்டர் உ. வே. சாமிநாத அய்யர் படத்தை ம.பொ. சி. திறந்துவைத்தார், மேடையில் அமைச்சர்கள் அன்பில் தர்மலிங்கம் க. இராசாராம் உள்ளனர்

# சென்னை மாநகராட்சி முன்பாக மாணவர்கள் ஆர்ப்பாட்டம்

சென்னை, ஏப். 21—சென்னை எழும்பூர் கோகுலம் மாநகராட்சி பள்ளியைச் சேர்ந்த சுமார் 200 மாணவ மாணவிகள் தங்களுடைய 2 வருடகாலக் கோரிக்கையை வற்புறுத்துவதற்காக இன்று சென்னை மாநகராட்சி கட்டிடத்தின் முன்பாகக் கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

பள்ளியில் உடனே கக்கூஸ் கட்டித் தரவேண்டும் என்பதே அவர்களுடைய கோரிக்கையாகும்.

அவர்கள் கடந்த 2 வருடமாக இதைக் கோரிவருவதாகக் கூறப்படுகிறது.

"கக்கூஸ் கட்டிக் கொடுங்கள் அல்லது ராஜிநாமா செய்யுங்கள்" என்று அவர்கள் கோஷமிட்டனர்

மாநகராட்சி கமிஷனர் வந்தபோது அவர்கள் கறுப்புக் கொடி காட்டினர். தங்கள் கோரிக்கை அடங்கிய மகஜரை அவர்கள் கமிஷனரிடம் அளித்துவிட்டுப் பின்னர் கலைந்து சென்றனர்.

# கோட்டைக்கு அடிசன் ஊழியர் ஊர்வலம்: கருணாநிதியிடம் மகஜர்

சென்னை, ஏப். 21—சிம்சன் தொழிற்சங்கத் தலைவர்களான ஆர். குசேலர், வி.பி. சிந்தன் ஆகியோர் தலைமையில் இன்று ஆயிரம் அடிசன் தொழிலாளர்கள் கோட்டை நோக்கி ஊர்வலமாகச் சென்றனர்.

கோட்டையில் முதலமைச்சர் கருணாநிதியைச் சந்தித்து அடிசன் கம்பெனி பிரச்சினையில் தலையிட்டு ஆவன செய்யுமாறு கோரி ஒரு மகஜர் கொடுத்தனர். மகஜரில் கூறப்பட்டிருப்பதாவது.

கடந்த மூன்று மாதகாலமாக அடிசன் கம்பெனி கதவடைப்பு செய்யப்பட்டிருப்பதை தாங்கள் அறிவீர்கள். பதின்மூன்று தொழிலாளர்களை அநியாயமாக வேலைநீக்கம் செய்ததையும், 27 தொழிலாளர்களை தற்காலிகமாக வேலை நீக்கம் செய்ததையும், வேலைப்பளு திணிக்கப்பட்டதையும் தொழிலாளர்கள் ஆட்சேபித்ததைச் சாக்காக்கி, லாக்கவுட் செய்யத் துணிந்தது நிர்வாகம்.

இப்பிரச்சினைகளை பேசித் தீர்க்க நாங்கள் பெரிதும் முயற்சித்தும் நிர்வாகம் எங்களிடம் பேச மறுத்தது 18-4-73 அன்று பவுண்டரி பிரிவு நீங்கலாக ஏனைய பகுதிகளைத் திறந்துள்ளது. இதன் மூலம் இப்பிரிவில் வேலை செய்யும் 300-க்கு மேற்பட்ட தொழிலாளர்களை ஆட்குறைப்பு செய்துள்ளது. ஆட்குறைப்பு செய்யவில்லை என்றும், பவுண்டரியை மூடும் நோக்கம் இல்லை என்றும் பத்திரிகையில் அறிக்கை கொடுத்து, பவுண்டரி தொழிலாளிக்கும் நஷ்டஈடு கொடுத்து வேலையிலிருந்து விலகிக் கொள்ள கடிதம் எழுதியுள்ளது. இச்செயலே, அவர்கள் எவ்வளவு பொய்யான அறிக்கை வெளியிட்டுள்ளனர் என்பதற்கு சான்று.

வன்முறை என்று கூறுவதும், இரு சங்கங்களுக்கிடையே போட்டி என்று கூறுவதும், ஆட்குறைப்பை மூடிமறைக்க நிர்வாகம் செய்யும் தந்திரமாகும்.

நிர்வாகம் கூறும் வன்முறைத் தகவல்கள் அனைத்தும் பொய்யானதே. அடிசன் கம்பெனி உட்பட அனைத்து சிம்சன் கம்பெனிகளிலும் சங்கத் தேர்தல் நடத்த தமிழக அரசும் நிர்வாகமும், தொழிற் சங்கங்களும் தங்கள் முன்னிலையில் செய்த ஒப்பந்தப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட சிம்சன் சங்கத்திடம் பேச்சு நடத்த முன்வரவில்லை. மாறாக, விரல் விட்டு எண்ணக்கூடிய, உறுப்பினர்களைக் கொண்ட ஐ. என். டி. யு. சியுடன் பேசி ஆட்குறைப்பையும், வேலைப்பளுவையும் திணிக்க நிர்வாகம் முயல்கிறது.

ஏறத்தாழ 12,000 தொழிலாளர்கள் வேலை செய்யும் எஞ்சினியரிங் தொழிற்சாலைகளை சென்னையில் நடத்தும் சிம்சன் நிர்வாகத்துக்கு 300 பேர் வேலை செய்யும் பவுண்டரி தேவையில்லை என்று கூறுவது எந்தவிதத்திலும் நியாயப்படுத்த முடியாதது. இந்நிலையில் 300 தொழிலாளர்களை ஆட்குறைப்புச் செய்வதை எதிர்த்து. தொழிலாளர்கள் வைராக்கியத்துடன் போராடிக்கொண்டிருக்கையிலும் முதலாளி பணிகின்ற தருணத்திலும், முதலாளிகளுக்குதைரிய மூட்டும் விதத்தில் 18—4—73க்கு முன்னாள் இரவில் எல்லைப்புறக் காவல் பிரிவினர் மற்றும் ஏராளமான போலீசை இறக்குமதி செய்து உண்ணாவிரதமிருந்த பந்தலை பிரித்துஎறிந்துவிட்டு உண்ணாநோன்பு இருந்தவர்களையும், மற்றவர்களையும் கைதுசெய்தும், அடிசன் நிர்வாகத்துக்குத் துணைபோகு செயல்களை நாங்கள் வன்மையாகக் கண்டிக்கிறோம்—ஆட்சேபிக்கிறோம்.

இவ்வளவுக்குப் பின்னரும் பெரும்பான்மையான தொழிலாளர்கள் வேலைக்குத்திரும்பவில்லை என்றும் மேற்பார்வையாளர்கள் அதிகாரிகள் அரசு பயிற்சிபெறுவோர் ஆகியோர் சேர்ந்து 184 பேர் வேலைக்கு வந்துள்ளனர் என்பதை நிர்வாகம் அறிந்துள்ளது குறிப்பிடத் தக்கது.

அநியாயமான ஆட்குறைப்பை நடத்த நிர்வாகத்திற்கு போலீஸ் உதவியளிப்பதைநிறுத்தியிட்டுஅனைத்துத் தொழிலாளர்களையும் வேலைக்குஎடுக்கதங்களுடைய உடனடியான தலையீட்டை வேண்டுகிறோம்; இவ்வாறு மகஜரில் கூறப்பட்டுள்ளது.

# அமெரிக்க தூதரகம்முன் ஆர்ப்பாட்டம்

புதுடெல்லி, ஏப். 21—பாகிஸ்தானுக்கு மீண்டும் அமெரிக்கா ஆயுத சப்ளை செய்ய முடிவு செய்திருப்பதை எதிர்க்கும் வகையில் இங்குள்ள அமெரிக்க தூதரகத்தின் முன்னால் இரண்டாயிரம் பேர் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

நாடாளுமன்ற உறுப்பினர்களான சசிபூஷண், சத்பால் கபூர் ஆகியோர் தலைமையில் இந்த ஆர்ப்பாட்ட நடைபெற்றது. பின்னர் தூதுவரக அதிகாரியிடம் ஒரு மகஜர் கொடுக்கப்பட்டது.

# மின்னல் தாக்கி இருவர் பலி

ஆலப்புழை, ஏப். [illegible] ஆலப்புழையில் ஒருவரும், திருவில்லா கிராமத்தில் ஒருவரும் இடிமின்னலால் தாக்குண்டு மாண்டனர். ஆலப்புழை மாவட்டத்தில் நேற்று இடிமின்னல்கள் பலமாக ஏற்பட்டன.

மற்றும் ஐந்து பேர் தீப்புண்களுடன் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டனர்.

# நர்சுக்கு அழகு அவசியமா?

கல்கத்தா, ஏப். 21—நர்சுகளுக்கு அழகு அவசியமா என்பது பற்றி மேற்கு வங்க சட்டசபையில் சுமார் 20 நிமிஷ நேரம் சுவையான விவாதம் நடந்தது.

சமீபத்தில் பெண் நர்சுகளை தேர்ந்தெடுப்பதற்காக நடத்தப்பட்ட தேர்வின்போது, "அழகான தோற்றத்துக்கென 5 மார்க்குகள் ஒதுக்கப்பட்டிருந்ததை சில உறுப்பினர்கள் ஆட்சேபித்ததைத் தொடர்ந்து இந்த விவாதம் எழுந்தது.

இவ்விதம் நிர்ணயிப்பது இனிய குரலும், அழகும் வேலை வாய்ப்பு குறித்த அரசியல் சட்ட ஷரத்தை மீறுவதாகும் என்று காங்கிரஸ் உறுப்பினர் ஒருவர் கூறினார்.

சுகாதார மந்திரி அஜித் பாஞ்சா பதிலளிக்கையில் "அழகுத் தோற்றமானது அநேக சமயங்களில் நர்சுகளின் தகுதிகளைக் காட்டுகிறது" என்றார்.

பெண் உறுப்பினரான கீதா முகர்ஜி இதை மறுத்து "அழகாக இல்லாதவர்களும் சிறந்த நர்சுகளாக உள்ளனர்" என்று குறிப்பிட்டார்.

இல்லை என்ற காரணத்தால் தேர்வுக்கு வந்த பெண்களில் பலர் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்று சில மெம்பர்கள் புகார் கூறினர்.

"மற்ற தகுதிகளைவிட அழகை முக்கியமாகக் கருதக்கூடாது" என்று சுகுமார் பானர்ஜி கூறினார்.

கடைசியில் சுகாதார அமைச்சர் பதிலளிக்கையில் அழகுத் தோற்றத்தைவிட உண்மையான சேவையே "அழகு" எனக் கருதப்படும் என்று சொன்னார்.

காலநடை இன்ஷ்யூரன்ஸ்

# மன்றாடியார் கோரிக்கை

கோவை, ஏப். 21—கால் நடைகளுக்கான இன்சூரன்ஸ் திட்டத்தைக் கொண்டுவர வேண்டும் என்று பழைய மந்திரி என். [illegible] எஸ். மன்றாடியார் வற்புறுத்தினார்.

இங்கு நேற்று துவங்கிய தமிழ்நாடு விவசாயிகள் மாநாட்டிற்கு மன்றாடியார் தலைமை வகித்தார். அவர் தமது உரையில் கூறியதாவது:—

பயிர் இன்சூரன்ஸ் மாதிரியில் கால்நடைகளுக்கும் இன்சூரன்ஸ் திட்டத்தை அமுல்படுத்தலாம். கால்நடைகள் விவசாயிகளின் மதிப்புமிக்க செல்வம் ஆகும் எனவே, இந்த திட்டம் மிகவும் அவசியமான ஒன்றாகும்.

விவசாய உற்பத்திப் பொருள்களுக்கு குறைந்தபட்ச உத்தரவாதமான விலை நிர்ணயம் செய்யப்பட வேண்டும். அப்படி நிர்ணயிக்கப்பட்ட விலையை விட விலைகள் குறையுமானால், உற்பத்திப் பண்டங்களை அரசே கொள்முதல் செய்ய முன்வரவேண்டும். இவ்வாறு மன்றாடியார் கூறினார்.

நாகர் கோயில் ரெயில்பாதை

# நகர் வழியாக அமைக்க திட்டம்

நாகர்கோயில், ஏப். 21—புதிதாக அமைக்கப்படும் ரயில்பாதை நாகர்கோவில் நகரப்பகுதியை இணைக்கும் வகையில் இருக்கும் என்று தென்பிராந்திய ரயில்வே தலைமை பொறியர் [illegible] பத்மநாபன் தெரிவித்தார்.

திருநெல்வேலி மாவட்டம் வள்ளியூரில் வேலையைத் துவக்கி வைத்து அவர் பேசினார். அவர் கூறியதாவது:—

முதலில் போடப்பட்ட திட்டப்படி, நாகர்கோயில் நகர எல்லைக்குவெளியேதான் ரெயில்பாதை அமைக்கப்பட இருந்தது. நகரவசதிகளின் நலனை கருத்தில் கொண்டு பிறகு முக்கிய பிரமுகர்கள் பலரும் கேட்டுக்கொண்டதற்கிணங்க நகரப் பகுதியை ஒட்டி ரெயில்பாதை அமையும் வகையில் திட்டமிட்டுள்ளது.

புதிதாக அமைக்கப்படும் ரெயில்பாதைகளில் டீசல் எஞ்சின்களை விடுவதுபற்றி ரெயில்வே அதிகாரிகள் பரிசீலித்து வருகின்றனர். இவ்வாறு பத்மநாபா கூறினார்.

# சீரணிக்கு புதிய அதிகாரி நியமனம்

சென்னை, ஏப். 21—தமிழ் நாடு சீரணியின் தனி அதிகாரியாக எம். அப்துல் ரகீம் நியமிக்கப்பட்டுள்ளார். ஊர்வளர்ச்சி—உள்ளாட்சி துறை உதவிச் செயலாளராக இதுவரை பணியாற்றிவந்த அப்துல்ரகீம், ஏற்கனவே, பொதுப்பணித்துறை அமைச்சர் சாதிக்பாட்சாவின் நேர்முக உதவியாளராகவும் பணியாற்றியவராவார். நாமக்கல்லைச்சேர்ந்த இவர், கோவை மாவட்டத்தில் வட்டார வளர்ச்சி அதிகாரியாகவும், தாசில்தாராகவும் பணிபுரிந்தவர்.

சீரணி தனி அதிகாரியாக இருந்துவந்த பரமசாமிமரணமடைந்ததை யடுத்து அந்தப் பதவிக்கு அப்துல்ரகீம் நியமிக்கப்பட்டுள்ளார்.

# பேங்க் குமாஸ்தா கைது

நாகர்கோயில், ஏப். 21—ஒரு பேங்க் டிமாண்ட் டிராப்ட் மோசடி சம்பந்தமாக, இங்குள்ள ஸ்டேட் பேங் ஊழியரான ஆறுமுகம் (30 வயது) கைது செய்யப்பட்டார். மாவட்ட மாஜிஸ்திரேட் அவரை காவலில் வைக்க விட்டார்.

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஏப். 21—

**தங்கம்**

24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 326 50
22 காரட்) சில்லரை 1 கிராம் ரூ. 31 00
14 காரட்) சில்லரை 1 கிராம் ரூ. 20 50

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 630 00
..ள்ளூர் வெள்ளி ரூ. 625 00
வெள்ளி 10 கிராம்) ரூ. 6 40

**மணிலாப்பயறு**

..ரிகால பட்டாணி 80 கி. கி. ரூ. 250 00

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 612 00
சில்லரை விலை ரூ. 6 7உ

**விளக்கெண்ணெய்**

100 கி. கி.) ..ன்னை கிடங்கு ..டலிவரி திரு..த்தூர்
மொத்த விலை ரூ. 635 00
சலம் தாமரை அன்னம் ..ர்க்(16 05கி.கி) ரூ. 100 00

**தேங்காய் எண்ணெய்**

16.06 கி.கி.) டின் ம். எஸ். மார்க ரூ. 125 00
முதல் ரூ. 126 00

**நல்லெண்ணெய்**

.. கி. கொண்ட டின் ..க்கு(அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 118 00
..விற்பனை வரி தனி
சில்லரை ..லோ 1க்கு) ரூ. 7 40

**கடலைப்பிண்ணாக்கு**

..கி.கி. கொண்ட மூட்டைக்கு ..எக்ஸ்பெல்லர் ரூ. 95 00

**சர்க்கரை**

..கிரங்க மார்க்கெட் விலை 100 கி.கி. ரூ. 338 00
340 00

தி ண் டு க் க ல் தே ர் த ல்

# முடிவை மாற்றிக்கொள்ள இந்திரா காங்கிரசுக்கு மனோகரன் வேண்டுகோள்

சென்னை, ஏப். 21—திண்டுக்கல்லில் போட்டியிடுவது என்ற முடிவை மறு பரிசீலனை செய்யுமாறு இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு அண்ணா தி. மு. கழகத் தலைவரான மனோகரன் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

இந்திரா காங்கிரஸ் கட்சி மேலிடம் எடுத்துள்ள முடிவு இந்திரா காங்கிரஸ் கட்சியிலேயே பலருக்கு ஏமாற்றத்தை அளிக்கும் என்று மனோகரன் குறிப்பிட்டு இம்முடிவை சம்பத் ஆட்சேபித்துள்ளதை சுட்டிக் காட்டினார்.

திண்டுக்கல்லில் போட்டியிடுவம் .. காங்கிரஸ் மேலிடம் எடுத்துள்ள முடிவு தனக்கு ஏமாற்றத்தை அளித்துள்ளதாக மனோகரன் கூறினார்.

இந்த உபதேர்தலில் போட்டியிடுவது என்று தங்கள் கட்சி எடுத்துள்ள முடிவு மாறாது என்று மனோகரன் அறிவித்துள்ளார்.

அவர் ஓர் அறிக்கையில் மேலும் கூறியுள்ளதாவது:— திண்டுக்கல் உபதேர்தலில் போட்டியிடுவதென முடிவு செய்ய காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டுக்கு உள்ள உரிமையை நான் மறுக்கவில்லை. எனினும் இப்போது மீண்டும் ஒன்று சேர்ந்துவரும் பிற்போக்கு சக்திகளை முறியடிக்க இது எப்படி உதவும் என்று புரியவில்லை.

### ஏமாற்றம்

கம்யூனிஸ்டுக் கட்சி, மற்றும் இதர முற்போக்கு அரசியல சக்திகளின் ஆதரவுடன் திண்டுக்கல்லில் போட்டியிடுவது என்பது அண்ணா தி. மு. கழகம ஏற்கெனவே எடுத்த முடிவாகும்.

அந்த முடிவை மாற்றிக் கொள்ளப் போவதில்லை.

மாறாக காங்கிரஸ் கட்சி தனது முடிவை மறு பரிசீலனை செய்யவேண்டும்.

சமீபத்திய தேர்தல்களில் ஏற்பட்ட தோல்விகள் காங்கிரஸ் கட்சி மேலிடத்தின் கண்களைத் திறந்திருக்கும் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனால் நான் இப்போது ஏமாற்றமடைந்திருக்கிறேன் என்பதை ஒப்புக்கொள்கிறேன்.

இவ்வாறு மனோகரன் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.



## இந்திராவை சந்தித்து மனோகரன் நடத்திய பேச்சு

திண்டுக்கல் தேர்தல் சம்பந்தமாக அண்ணா தி மு க. தலைவரான மனோகரன் எம்.பி இரண்டு தினங்களுக்கு முன்னர் டெல்லியில் பிரதமர் இந்திரா காந்தியை சந்தித்துப் பேசினார் என்று இப்போது தகவல் தெரியவந்துள்ளது.

காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு முடிவு எடுத்ததற்கு முன்னர் அவர் இந்திராவை சந்தித்தார்.

திண்டுக்கல்லில் போட்டியிடுவதென்று தமிழ் நாடு இந்திரா காங்கிரஸ் செயற்குழு முடிவு எடுத்ததைத் தொடர்ந்து இச்சந்திப்பு நடந்தது.

திண்டுக்கல்லில் இந்திரா காங்கிரஸ் கட்சி போட்டியிட வேண்டாம் என்று பிரதமரை மனோகரன் கேட்டுக்கொண்டார்.

"தி. மு. க. பழைய காங்கிரஸ் ஆகிய பிற்போக்கு சக்திகளுக்கு" எதிராக நாட்டில் கம்யூனிஸ்டு. அண்ணா தி. மு. கழகம், இந்திரா காங்கிரஸ் ஆகிய மூன்று கட்சிகளும் சேர்ந்து "மூன்றாவது சக்தி"யாக விளங்கும் என்று தமிழ்நாட்டு மக்கள் எதிர்பார்க்கிறார்கள் என்று பிரதமரிடம் மனோகரன் கூறினார்.

"எனவே இந்திரா காங்கிரஸ் தனது வேட்பாளரை நிறுத்தினால் மக்களிடையே பரவலாக ஏமாற்றம் ஏற்படும்" என்றும் அவர் கூறினார்.

"திண்டுக்கல்லில் அண்ணா தி. மு. க. போட்டியிடும் என்றும் அதை கம்யூனிஸ்டு கட்சியும், இந்திரா காங்கிரசும் ஆதரிக்க வேண்டும் என்று ஆரம்பத்திலேயே தெளிவுபடுத்தியிருக்கிறோம்" என்றும் மனோகரன் கூறினார்.

### இந்திரா கூறியது என்ன

திண்டுக்கல்லில் போட்டியிடவேண்டும் என்று முன்னர் மதுரைக்கு விஜயம் செய்தபோது தனது கட்சியினர் தன்னிடம் முறையிட்டுக் கொண்டனர் என்று மனோகரனிடம் இந்திரா காந்தி கூறியதாகத் தெரிகிறது.

திண்டுக்கல்லில்

## போட்டி ..டுவதை இந்திரா ஆதரித்தார்

புதுடெல்லி, ஏப். 21— திண்டுக்கல் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் போட்டியிட வேண்டும் என்பதைப் பிரதமர் இந்திரா காந்தி ஆதரித்தார் என்று தெரிய வந்துள்ளது.

நேற்று காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு கூட்டம் நடந்தபோது தமிழ் நாடு இந்திரா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ராமையா எந்த சூழ்நிலையில் தமிழ்நாடு கிளை போட்டியிட முடிவு செய்தது என்பதை விளக்கினார்.

தமிழ்நாட்டில் உள்ள அரசியல் நிலவரத்தை அவர் எடுத்துக் கூறினார்.

மோகன் குமாரமங்கலம், சுப்பிரமணியம் ஆகியோரும் தங்கள் கருத்தை எடுத்துக் கூறினர்.

இவர்கள் கூறியதைக் கேட்ட இந்திரா காந்தி இந்திரா காங்கிரஸ் கட்சி திண்டுக்கல்லில் போட்டியிடவேண்டும் என்ற கருத்தை ஆதரித்ததாகக் கூறப்படுகிறது.

இந்திரா காங்கிரஸ் கட்சி மற்ற எதிர்க்கட்சிகளின் சவாலை ஏற்று தமிழ்நாட்டில தாங்கள் ஒரு சக்தியாக விளங்குவதை எடுத்துக் காட்டியாக வேண்டும் என்ற வாதத்தை இந்திரா காந்தி ஏற்றுக்கொண்டு இவ்விதம் அதை ஆதரித்ததாகத் தெரிகிறது.

திண்டுக்கல்லில் இந்திரா காங்கிரஸ் தி. மு.கவைத் தோற்கடிப்பது நிச்சயம் என்று ராமையா இக்கூட்டத்தில் உறுதி கூறியதாகவும் ..ல்லப்படுகிறது.

## நெல் திருட்டு: மந்திரி விளக்கம்

சென்னை, ஏப். 21—சமீப நாட்களில் நெல் மூட்டைகள் திருட்டு போயுள்ள கிடங்குகள் கொள் முதல் அரிசி அரைத்துக் கொடுக்க அரசாங்கத்தினால் நியமிக்கப்பட்ட அரிசி மில்காரர்களுக்கு சொந்தமானவையே. அவை அரசாங்க கிடங்குகள் அல்ல என்று உணவு அமைச்சர் மன்னை நாராயணசாமி நேற்று நிருபர்களுக்கு அளித்த பேட்டியில கூறினார்.

திண்டிவனம், வளவனூர் ஆகிய இடங்களில் நெல் மூட்டைகள் காணாமல் போனது பற்றிக் குறிப்பிட்டு அவர் இவ்வாறு சொன்னார்.

அமைச்சர் மேலும் கூறியதாவது:—

கொள்முதல் செய்த நெல்லை அரிசி மில்காரர்களின் கிடங்கில் பொறுப்பாகவைத்திருந்து அரைத்து கொடுக்க வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் அரசாங்கம் அரிசி மில்காரர்களை நியமனம் செய்கிறது. அவர்களிடம் லைசென்சு கட்டணமும் முறைப்படி வசூலிக்கபட்டு இருக்கிறது.

அரிசிமில்காரர்களின் இவ்விதக் கிடங்குகளை அரசாங்க அதிகாரிகள் வாரத்துக்கு ஒரு முறையும், மூன்று மாதத்திற்கு ஒருமுறையும் போய் சரிபார்க்கிறார்கள். 10..-க்கு ஒன்று இரண்டு பேர் தான் இப்படி தவறு செய்கிறார்கள். இருந்தாலும் அவர்கள் மீதும் அரசாங்கம் கடும் நடவடிக்கை எடுத்துவருகிறது.

## அம்பேத்கார் பிறந்த நாள் விழா!

சென்னை. ஏப். 21— எண்ணூர், அசோக் லேலண்ட் டாக்டர் அம்பேத்கார் தொழிலாளர் பேரவை சார்பில அம்பேத்காரின் 83-வது பிறந்த நாள் விழா கொண்டாடப்பட்டது. 4000 தொழிலாளர்கட்கும் இனிப்பு வழங்கப்பட்டது. மறைந்த தொழிலாளர்களான வி. மூர்த்தி. குப்புசாமி ஆகியோர் குடும்பங்களுக்கு தலா ரூ. 200 வழங்கப்பட்டது. அண்ணல் வழியில் தொடர்ந்து பணியாற்றுவது என 1800 தொழிலாளர்கள் எம், பாலையம் தலைமையில் உறுதி மொழி எடுத்துக் கொண்டனர்.

## மேலிட முடிவுக்கு சம்பத் எதிர்ப்பு

புதுடெல்லி, ஏப். 21— திண்டுக்கல் உப தேர்தலில் போட்டியிடுவது என்று இந்திரா காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு எடுத்துள்ள முடிவுக்கு தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் செயற்குழு உறுப்பினரான ஈ. வி. கே. சம்பத் எதிர்ப்புத் தெரிவித்துள்ளார்.

"இம்முடிவு தமிழ்நாட்டில் காங்கிரஸ் ஊழியர்களுக்கு அதிர்ச்சியை" அளிக்கும் என்று அவர் வெளியிட்டுள்ள அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

"தி. மு. க. ஆட்சியை அகற்ற எல்லா முற்போக்கு சக்திகளும் ஒன்றுபட வேண்டும் என்று திண்டுக்கல் மாவட்ட காங்கிரஸ் கமிட்டி போட்ட தீர்மானம் முன்னர் பெரிதும் வரவேற்கப்பட்டது. ஆனால் அத்தீர்மானம் குறித்து காங்கிரஸ் மேலிடம் சிந்தனை செலுத்தாதது வருந்தத்தக்கது" என்றும் சம்பத் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

## அரசுத்துறை ஊழியர் கோரிக்கை நிராகரிப்பு

புதுடெல்லி, ஏப். 21— ரெயில்வே, தபால் தந்தி, பாதுகாப்புத்துறை, அரசாங்க அச்சகம் போன்ற அரசுத் துறை நிறுவனங்களின் ஊழியர்களுக்கு 8 3/3 சதவிகித குறைந்தபட்ச போனஸ் தர வேண்டும் என்ற கோரிக்கையை அரசு நிராகரித்தது.

# சோஷலிச அரங்கை கலைக்க மாட்டேன்: கண்ணதாசன் அறிவிப்பு

சென்னை, ஏப். 21—சோஷலிச அரங்கு அகில இந்திய மட்டத்தில் கலைக்கப்பட்டு விட்டபோதிலும் தமிழ் நாட்டில் இதைக் கலைக்கப்போவதில்லை என்று தமிழ் நாடு சோஷலிச காங்கிரசின் தலைவரான கவிஞர் கண்ணதாசன் அறிவித்தார்.



"எனினும் தமிழ்நாட்டில் சோஷலிச அரங்கு ஆக்க வேலைகளில் மட்டுமே ஈடுபட்டுவரும் என்றும் கண்ணதாசன் தெரிவித்தார்.

வேலையில்லாப் பட்டதாரிகளுக்கு சுய வேலைவாய்ப்பு என்னும் பொருள்பற்றி தமிழ்நாடு சோஷலிச அரங்கு சார்பில் நடந்த கருத்தரங்கில் பேசுகையில் கண்ணதாசன் இவ்வாறு கூறினார்

கண்ணதாசன் பேசுகையில் கூறியதாவது: நம் நாட்டில் தொழில் வாய்ப்புக்களை ஏற்படுத்திக் கொள்ள நிறைய வாய்ப்புக்கள் இருக்கின்றன தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளின் உதவிபெற்று தொழில்கள் தொடங்க 800 யோசனைகள் மத்திய அரசால் அனுப்பப்பட்டுள்ளன; எனினும் பலருக்கும் இது பற்றி தெரியாது.

### சோஷலிச அரங்கு

தமிழ்நாட்டில் சோஷலிச அரங்கை நான் கலைக்கப் போவதில்லை. அதைவைத்துக் கொண்டு நான் பெரிதாக அரசியல் நடத்தப்போவதில்லை. இதுபோன்று இளைஞர்களுக்கு உதவி புரிய பயன்படுத்தலாம் என்று இருக்கிறேன் என்று கூறினார்.

இக்கருத்தரங்கில் பிற்பட்டோர் நலத்துறை அமைச்சர் ராசாராம் பேசுகையில் வேலையில்லா பட்டதாரிகளின் நிலைமை பரிதாபத்துக்குரியது என்றார்.

"வேலையில்லாதோர் வேலைவாய்ப்பை பெற நம்பிக்கையும் நாணயம்தான் தேவை; இவை இருந்தால் முன்னேற முடியும்" என்றும் அவர் கூறினார்.

வேலை நடைபெற நம் நாட்டில் எவ்வளவோ வாய்ப்புகள் இருக்கின்றன. இவற்றை பயன்படுத்திக் கொள்ள எண்ணங்களை வலுப்படுத்திக் கொள்ள வேண்டும். மனவளங்களை அதிகப்படுத்திக் கொள்ள வேண்டும்" என்றும் அவர் கூறினார்.

கருத்தரங்கில் பொருளாதார நிபுணர் டாக்டர் பி. நடராஜன் பேசுகையில் நம்மிடையே வேலைவாய்ப்புக்களை பெருக்கிக்கொள்ள புதிய தொழில் நாகரீகத்தை கடைபிடிக்க வேண்டும் என்றார்.

இந்தியன் பாங்கு அதிகாரி வெள்ளையன் பேசுகையில் "வங்கிகளில் கம்ப்யூட்டர்களை புகுத்தக்கூடாது என்று ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கிறது. இதை மற்றவர்களையும் கடைபிடித்தால் வேலைவாய்ப்பு பெருகும் என்றார்,

சுதந்திரப் போராட்ட தியாகிகள் காங்கிரஸ்

## தி.மு.கவுக்கு ஆதரவு

மதுரை, ஏப். 21—புதிதாக தொடங்கப்பட்டுள்ள தமிழ் நாடு சுதந்திரப் போராட்ட தியாகிகள் காங்கிரஸ் கட்சியினர் திண்டுக்கல் தேர்தலில் தி. மு. கழகத்தை ஆதரிப்பதென்று முடிவு செய்துள்ளனர்,

தமிழ்நாட்டைச் சேர்ந்த சுதந்திரப் போராட்டத் தியாகிகள் மதுரையில் கூடி தனிக்கட்சி ஒன்றைத் தொடங்கியுள்ளனர். அவர்கள் நிபந்தனையற்ற ஒருமுகமான ஆதரவை திண்டுக்கல் நாடாளுமன்ற இடைத் தேர்தலில் தி. மு. கழகத்திற்கு அளிக்கத் தீர்மானித்துள்ளனர்.

காங்கிரஸ் கட்சியினர் ஆளுகின்ற மற்ற மாநிலங்களைவிட தமிழ்நாட்டில் தி. மு. கழக அரசாங்கம் சோஷலிசத் திட்டங்களை சிறப்பாக நிறைவேற்றியுள்ளதாகவும் அவர்கள் தெரிவித்துள்ளனர்.

இந்தக் கூட்டத்தை சுதந்திரப் போராட்ட தியாகிகள் சங்கத் தலைவர் டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி கூட்டினார்.

புதிய கட்சியில் ஆயிரக்கணக்கானவர்கள் சேருவார்கள் என்று கிருஷ்ணமூர்த்தி தெரிவித்தார்.

## அ. தி. மு. க. வேட்பாளரை குடியரசு கட்சி ஆதரிக்கும்

சென்னை, ஏப். 21—திண்டுக்கல் தேர்தலில் அண்ணா தி. மு. க. வேட்பாளரை ஆதரிப்பது என்று தமிழ்நாடு குடியரசு கட்சியின் (கெயிக்வாட் கோஷ்டி) நிர்வாகக் கமிட்டி முடிவு செய்துள்ளது.

இக்கூட்டத்துக்கு கட்சித் தலைவர் சுந்தரராஜன் தலைமை வகித்தார்.

திண்டுக்கல் தொகுதியில் தீவிர சுற்றுப் பிரயாணம் செய்து அண்ணா தி. மு. க. வேட்பாளருக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்யவேண்டும் என்று கட்சியின் தலைவர்கள் கேட்டுக்கொள்ளப்பட்டனர்.

## குடிசைமாற்று வாரியப்பணி: அமெரிக்க தூதர் பாராட்டு

சென்னை, ஏப். 21— தமிழ்நாடு குடிசை மாற்றுவாரியம் சேரிவாழ் மக்களுக்கென நொச்சி நகரில் கட்டிக் கொடுத்துள்ள நவீன குடியிருப்புக்களை அமெரிக்கத் தூதர் மொய்னிஹான் பார்வையிட்டார்.

தமிழக அரசின் சமூகநல இலாகா நடத்தும் 'கேர்' நிலையத்தையும் அவர் பார்த்தார். குழந்தைகளுக்கு சத்துணவு வழங்குவதில் குடிசை மாற்று வாரியம் காட்டுகின்ற ஈடுபாட்டை அவர் பாராட்டினார்.

குடிசை மாற்று வாரியம் மிகப்பெரிய அளவில் கட்டிடத் திட்டங்களை நிறைவேற்றி வரும் நடவடிக்கை அமெரிக்கத் தூதரை மிகவும் கவர்ந்தது.

## இந்திரா காங்கிரசார் மீது நடவடிக்கை

புவனேஸ்வரம், ஏப். 21— கட்சிக்கு எதிராகவும், பிரகதி தளத்துக்கு ஆதரவாகவும் நடவடிக்கைகளில் ஈடுபட்டதற்காக ஒரிசாவில் இந்திரா காங்கிரஸ் கட்சியைச்சேர்ந்த 25 பேர்கள், அக்கட்சியில் ..சாதாரண உறுப்பினர் பதவி ..கள் எல்லாப் பொறுப்புகளிலிருந்தும் ஆறு ஆண்டு காலத்துக்கு நீக்கிவைக்கப்பட்டனர்,

## கோவை மாவட்ட ஜவுளி ஆலைத் தொழிலாளர் ஸ்டிரைக் நோட்டீஸ்

சென்னை, ஏப். 21—கோவை மாவட்டத்தில் உள்ள பஞ்சாலைத் தொழிலாளர்கள் மே 5-ந் தேதியிலிருந்து வேலை நிறுத்தம் செய்யப்போவதாக அறிவித்துள்ளனர்.

தேசிய பஞ்சாலைத் தொழிலாளர் சங்கமும், ஐக்கிய பஞ்சாலைத் தொழிலாளர் சங்கமும் வேலைநிறுத்த நோட்டீஸ் கொடுத்துள்ளன.

லே ஆப் காலத்தில் நிரந்தரத் தொழிலாளர்களுக்கு நஷ்டஈடு தரவேண்டும் என்றும், பிப்ரவரி முதல் 240 நாள் வேலை செய்திருக்கும் தற்காலிகத் தொழிலாளர்கட்கு ..தம் ரூ. 100 தரவேண்டும் என்றும், இந்த சங்கங்கள் கோரியுள்ளன.

1972 அக்டோபருக்கு முன் மூன்று மாத காலம் வேலை செய்த சராசரி நாட்கள் அடிப்படையில் தற்காலிகத் தொழிலாளர்கட்கு வேலை கொடுக்க வேண்டும் என்றும் கோரப்பட்டுள்ளது.

தற்காலிகத் தொழிலாளர்கட்கும் ஈ. எஸ். ஐ மற்றும் உள்ள வசதிகள் விரிவுபடுத்த வேண்டும்என்றும் கோரிக்கை விடுக்கப்பட்டிருக்கிறது.

கோவை மாவட்டத்தில் உள்ள 84 பஞ்சாலைகளிலும் மொத்தம் 56 ஆயிரம் தொழிலாளர்கள் பணியாற்றுகின்றனர்.

..ஸ் அரசுடமைச் சட்..

## உயர்நீதி மன்றத் தீர்ப்பு பற்றி முதல்வர்

சென்னை, ஏப். 21—பஸ் அரசுடமைச் சட்டம் செல்லாது என்று சென்னை உயர் நீதிமன்றம் தீர்ப்பளித்தது அல்லவா? இதுபற்றி நிருபர்கள் முதல்வர் கருணாநிதியிடம் கேட்டார்கள்.

'பஸ் போக்குவரத்தை அரசுடைமையாக்குவது என்ற ..கொள்கையை அரசு கைவிடாது. இந்தக் கொள்கையை செயல்படுத்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்' என்று முதல்வர் பதிலளித்தார்.

உயர்நீதிமன்றத் தீர்ப்பை எதிர்த்து அப்பீல் செய்யப் போகிறீர்களா?' என்று கேட்டதற்கு. முதல்வர் அளித்த பதில் வருமாறு:

எல்லா அம்சங்களும் உரிய காலத்தில் கவனிக்கப்படும். உயர் நீதிமன்றத் தீர்ப்பைப் பார்க்கும்போது பஸ்போக்குவரத்தை அரசுடைமையாக்கியதை உயர் நீதிமன்றம் ஆட்சேபிக்கவில்லை. சட்டத்தின் சில விதிகளைத் தான் செல்லுபடியாகாதென்று கூறப்பட்டிருக்கிறது என்று முதல்வர் கூறினார்.

## நீர் மட்டம்

சென்னை, ஏப். 19—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 18.51 | மீட்டர் |
| பெரியாறு | 2.85 | „ |
| வைகை | 17.13 | „ |
| பாபநாசம் | 8.24 | „ |
| கிருஷ்ணகிரி | 12.60 | „ |
| சாத்தனூர் | 3.59 | „ |
| மணிமுத்தார் | 24.41 | „ |
| பேச்சிபாறை | 5.82 | „ |
| பெரிஞ்சாணி | 3.32 | „ |

# போலீஸ் அதிகாரி வீட்டிலேயே கைவரிசை காட்டிய திருடர்கள்

சேலம், ஏப். 21—போலீஸ் அதிகாரி வீட்டிலேயே திருடர்கள் தங்கள் கைவரிசையைக் காட்டியிருக்கின்றனர்.

சேலத்தில் போக்குவரத்து போலீஸ் சார்ஜண்ட் வீட்டிலிருந்து ரூ. 5 ஆயிரத்து 500 மதிப்புள்ள நகைகளும் ரொக்கமும் களவாடப்பட்டிருக்கின்றன.

நேற்று முன்தினம் மாலை சார்ஜண்டின் மனைவி வாயிற் கதவை தாளிடாத நிலையில் விட்டுவிட்டு சமையல் அறையில் வேலை செய்துகொண்டிருந்த நேரத்தில், யாரோ சிலர் உள்ளே நுழைந்து களவாடிச் சென்றிருக்கின்றனர்.

இந்த நிகழ்ச்சி நடந்தஅன்று அந்த சார்ஜண்ட் ஊரில இல்லை என்று சொல்லப்படுகிறது; இதுசம்பந்தமாக ஒரு வழக்குப் பதிவு செய்யப்பட்டு புலன் விசாரணை நடைபெற்றுவருகிறது.

## நாகையில் பாங்கி ஊழியர் ஆர்ப்பாட்டம்

நாகப்பட்டினம், ஏப். 21— தொழிற்சங்கத் தலைவரை வேலையிலிருந்து நீக்கப்பட்டதையும், சில ஊழியர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டு இருப்பதையும் கண்டித்து நேற்று. நாகையில் உள்ள ஐந்து பாங்கிகளின் ஊழியர்கள். மதுரை பாங்கி முன் ஆர்ப்பாட்டம நடத்தினர்.

..சம்பந்தப்பட்ட பாங்கியின் ஊழியர்கள் 2 மணி நேரம் வேலை நிறுத்தம் செய்தனர்.

# "உறங்கும் புலியை சீண்ட வேண்டாம்": அண்ணு மகன் கவுதமன் அறிக்கை

சென்னை, ஏப். 21—அண்ணு குடும்பத்துக்கு நிதி உதவி அளித்தது சம்பந்தமாக தி. மு. கழகத் தலைவர் கருணாநிதியும், பொதுச் செயலாளர் நெடுஞ்செழியனும் விடுத்த அறிக்கைகளுக்கு அண்ணுவின் மகன் கவுதமன் பதிலளித்துள்ளார்.

"அவர்கள் ரசீது பெற்றுக்கொண்டு நிதி வழங்கியிருப்பார்களேயானுல் அவர்கள் எந்த நோக்கத்துடன் அப்படிச் செய்திருக்கிருர்கள் என்பது மக்களுக்குப் புரியும். அப் பணம் கடனாகத்தான் தரப்பட்டது" என்றும் கவுதமன் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

"அண்ணு குடும்பம் அடியோடு போய்விட்டது என்று கருத வேண்டாம், தூங்கும் புலியை சீண்டாதீர்கள்" என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

கவுதமன் தனது அறிக்கையில் மேலும் கூறியுள்ளதாவது—

"ஒரு கட்சியை வளர்க்கத் தன் உயிரையே அர்ப்பணித்த ஒருவரின் குடும்பத்திற்குச் செய்த உதவிக்காக ரசீது வாங்குவது என்ற முறையை உலகில் வேறு எங்கும் காணமுடியாது.

## நகைகளை மீட்க

நகைகளை மீட்க நிதி வழங்கியதாக கூறியிருக்கிருர்கள். அதனுல் நாங்கள் வெட்கப்படவில்லை. எங்கள் தந்தை எவ்வளவு [illegible] அவர் எங்கள் குடும்பத்திற்காகச் சேர்த்து வைக்கவில்லை. ஆனல் நாங்கள் அதற்காக கவலைப்படவில்லை.

## பட்டியலிருக்கிறது

என் சகோதரர் பாபுவுக்கு ஒரு வேலை கொடுத்ததாகச் சொல்கிருர்கள். அதை மிகைப்படுத்திக் கூறுகிருர்கள்.

எந்தவிதமான தகுதிகளும் இல்லாமல் வேலை வாய்ப்புத் தரப்பட்டவர்களின் பட்டியல் என்னிடம் இருக்கிறது. வேலைவாய்ப்பு என்ன எவ்வளவோ தந்திருக்கிருர்கள்.

ராணி அம்மாவிடம் ஒரு தொகை கொடுப்பதாக ஒரு புகைப்படத்தைப் பிரசுரித்திருக்கிருர்கள்.

ராணி அம்மாள் பணம் வாங்குவது போன்று அவர்கள் பத்திரிகையில் ஒரு படத்தைப் பிரசுரித்திருப்பதுவியப்பாக இருக்கிறது.

## சொந்தப் பணமா?

அவர்கள் அண்ணு குடும்பத்திற்கு நிதி உதவி செய்ததாகக் கூச்சல் போடுகிருர்களே. அவர்கள் அந்தப் பணத்தைச் சொந்தப் பணத்திலிருந்து கொடுத்தார்களா? கட்சி நிதிலிருந்துகொடுத்தார்களா? இந்தசிறு தொகையைத் தவிர வேறு எதுவும் அண்ணு குடும்பத்திற்குச் செய்ய முடியவில்லை என்பதை அவர்கள் ஏன் பகிரங்கமாகச் சொல்லியிருக்கக் கூடாது?

## உறங்கும் புலி

அவர்கள் எங்கள் அமைதியைத் தவருக நினைக்கிருர்கள். பெரியவர்களுக்கு மதிப்புக்கொடுக்க நாங்கள் சும்மா இருக்கிரும், அண்ணு குடும்பம் அடியோடு போய் விட்டது என்று கருதவேண்டாம், உறங்கும் புலியைச் சீண்டாதீர்கள்.

இவ்வாறு கவுதமன் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

## தமிழகத்துக்கு மகாராஷ்டிர மின்சாரம்

பம்பாய், ஏப். 21—மகாராஷ்டிரம் தமிழ்நாட்டுக்கு மே, ஜூன், ஜூலை ஆகிய மூன்று மாதங்களிலும் [illegible] மூப்பது லட்சம் [illegible] வீதம் மின்சாரம் சப்ளை செய்யும். இதற்குப் பதிலாக தமிழ்நாடு மகாராஷ்டிரத்துக்கு நூல் சப்ளை செய்யும். மகாராஷ்டிரத்தின் மின்சாரம் கிடைப்பதின் பலனுக தமிழ்நாட்டில் அதிகப்படியாக உற்பத்தியாகும் நூலில் 75 சத விகிதத்தை கட்டுப்பாடு செய்யப்பட்டுள்ளவிலைக்கு மகாராஷ்டிரத்துக்கு தமிழ்நாடு சப்ளை செய்யும்.

நேற்று பம்பாயில் மகாராஷ்டிர முதலமைச்சர் வி. பி. நாயக்கும், தமிழ்நாடு அமைச்சர் எஸ். மாதவன், ஓ. பி. ராமன் ஆகியோருக்குமிடையே நடந்த பேச்சு வார்த்தைகளின் பலனுக மேற்கண்ட உடன்பாடு ஏற்பட்டது.

மகாராஷ்டிரத்துக்கு நூல் அவசரமாகத் தேவைப்படுகிறது. இந்த உடன்பாட்டின்படி சப்ளை செய்யப்பட்டு கொண்டிருக்கும் நூலில் ஒரு பகுதியை உடனடியாக சப்ளை செய்வதற்கு முயற்சி செய்ய தமிழ்நாடு ஒப்புக்கொண்டிருக்கிறது.

உடன்பாடு ஏற்பட்டுள்ள தகவலை மகாராஷ்டிர முதலமைச்சர் நாயிக், இப்போது தமது மாநிலத்தில் ஏற்பட்டுள்ள நூல் நெருக்கடியை சமாளிக்க இந்த உடன்பாடு உதவும் என்று கூறினர்.

மாநில அரசு [illegible] மில்களுக்கு மேற்கொண்டு நூல் உற்பத்தி செய்ய அதிகப்படி மின்சாரம் சப்ளை செய்யும். இவ்விரண்டும் சேர்ந்து நூல் தேவையை சமாளிக்கவும் என்று அவர் கூறினர்.

தமிழ்நாட்டில் 75 சத விகிதம் மின்சார வெட்டு காரணமாக அங்கு நூற்பு மில்கள் மூடப்பட்டுள்ளன அல்லது ஓரளவு தான்வேலை செய்கின்றன. இதனுல் மகாராஷ்டிரத்தில் விசைத்தறி, கைத்தறி தொழில்களுக்கு நூல் சப்ளை பாதிக்கப்பட்டுள்ளது. மாலேகான், நாகபுரி இவ்விடங்களில் வன்முறை கிளர்ச்சிகளுக்கு இதுவும் ஒரு காரணம் என்றும் அவர் சொன்னர்.

தமிழ்நாட்டில் அதிகப்படியாக உற்பத்தியாகும் நூலில் 75 சத விகிதம் மகாராஷ்டிரத்துக்கு சப்ளை செய்யப்படும். பாக்கி 25 சதவிகிதத்தை தமிழ்நாடே வைத்துக் கொள்ளும் என்று நாயிக் கூறினர்.

## புனு அருகே நில நடுக்கம்

புனு, ஏப். 21—புனு அருகே உள்ள கொய்னுநகரில் நேற்று முன்தினம் மாலை நில நடுக்கம் ஏற்பட்டது.

இந்த நிலநடுக்கத்துடன் உறுமல் சத்தம் போன்ற சத்தமும் கேட்டதாகப் போலீசார் தெரிவித்தனர்.

எனினும் நில நடுக்கத்தினுல் சேதம் எதுவும் இல்லை.

அண்டையிலுள்ள சிப்லுன் போட்லி, சாரா ஆகிய இடங்களிலும் இந்த நில நடுக்கம் இருந்தது.

இப் பகுதியில் நில நடுக்கம் ஏற்படுவது இம் மாதத்தில் இது மூன்றுவது தடவையாகும்.

# போர்க்கைதிகள்பிரச்னை: பேச்சுவார்த்தை நடத்த பாகிஸ்தான் அழைப்பு

புதுடெல்லி, ஏப். 21—பாகிஸ்தான் போர்க்கைதிகளை விடுதலை செய்வது சம்பந்தமாக இந்தியாவும், வங்காள தேஷும் கூட்டாகத் தெரிவித்துள்ள திட்டம் பற்றிப் பேச்சுநடத்த இந்தியப் பிரதிநிதிகளை ராவல்பிண்டிக்கு அனுப்பிவைக்குமாறு பாகிஸ்தான் கேட்டுக் கொண்டுள்ளது.

பாகிஸ்தான் ஜனதிபதி பூட்டோ கடந்த 3 நாட்களாக நடத்திய ஆலோசனைகளைத் தொடர்ந்து பாகிஸ்தான் அரசாங்கம்வெளியிட்ட அறிக்கையில் இந்த யோசனை தெரிவித்துள்ளது.

இந்தியாவும் வங்காள தேஷும் தெரிவித்துள்ள திட்டத்தில் சில சங்கடங்கள் உள்ளன என்றும், ஆனுலும் பேச்சுவார்த்தை நடத்த இடமுள்ளது என்றும் பாகிஸ்தான் தெரிவித்துள்ளது.

## உரிமை இல்லை

பாகிஸ்தான் போர்க்கைதிகளில் யாரையும் போர்க் குற்றங்களுக்காக விசாரிக்க வங்காளதேஷ் அரசுக்கு உரிமை இல்லை என்று பாகிஸ்தான் தனது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளது. எனினும் போர்க்கைதிகளில் யார் யார் மீது இவ்விதம் குற்றச் சாட்டுகள் சுமத்தப்பட்டுள்ளனவோ அவர்களை விசாரிக்க தாங்களே ஒரு விசாரணை மன்றம் அமைக்கத் தயாராக இருப்பதாக பாகிஸ்தான் தெரிவித்துள்ளது.

1000 வார்த்தைகள் கொண்ட இந்த அறிக்கையை பாகிஸ்தான் ரேடியோ அறிவித்தது.

## மிரட்டல்

பாகிஸ்தான் போர்க்கைதிகள் மீது வங்காளதேஷ் விசாரணை நடத்துமானுல், பாகிஸ்தானில் உள்ள 'வங்காளியர் (வங்காளதேஷ் பிரஜைகள்) மீது கலகப்பு வேலை, உளவு வேலை, தேசத் துரோகம் ஆகியவற்றுக்காக வழக்குப் போட்டு விசாரணை நடத்துவதைத் தவிர வேறு வழியில்லை என்று பாகிஸ்தான் தெரிவித்துள்ளது.

வங்காள தேஷில்

## போர்க்கைதி விசாரணை அடுத்த மாதம்

டாக்கா, ஏப். 21—வங்காள தேஷில் பாகிஸ்தானி போர்க் குற்றவாளிகள் மீதான வழக்கு விசாரணை அடுத்த மாதம் துவங்கும் என்று, வங்காள தேஷ் உள்துறையமைச்சர் டாக்டர் அப்துல் மாலிக் உகில் கூறினுர்.

நிருபர்கள் கூட்டத்தில் அவர் பேசினுர். போர்க் குற்றவாளிகள் மீதான வழக்குத் தயாரிக்கும் வேலைகள் முன்னேற வருகின்றன. எதிரிகளுக்கு உடந்தையாகயிருந்த 6000 பேர்கள் மீது குற்றப் பத்திரம் தயாரிக்கப்பட்டு விட்டது.

எதிரிக்கு உடந்தையாக இருந்தவர்கள் மீது தொடரப்பட்ட 592 வழக்குகளில் 313 வழக்குகளில் தண்டனை வழங்கப்பட்டுவிட்டது.

இந்தவழக்குகளை விசாரிப்பதற்கென்று தனி வழக்கு மன்றங்கள் அமைக்கப்பட்டுள்ளன இவ்வாறு வங்காள தேஷ் அமைச்சர் கூறினுர்.

## நாளைய நிகழ்ச்சி

தமிழ்நாடு லாரி உரிமையாளர் சம்மேளனத்தின் 10-வது பொதுக்குழுக்கூட்டம்: தலைமை எஸ். சிவசாமி, சங்கங்களுக்கு இணைப்பு அத்தாட்சிப் பத்திரங்கள் வழங்குபவர்: போக்குவரத்து அமைச்சர் எஸ். ராமச்சந்திரன், மற்றும் பலர் பேசுவர். கோகலேஹால் காலை 10 மணி.

# புளி விலை உயர்வு: பதுக்கல் காரணமா?

சென்னை, ஏப். 20—சென்னையில் கடந்த இரண்டு வாரத்தில் புளி விலை இரு மடங்காக உயர்ந்துவிட்டது. இப்போது கிலோ ரூ. 5-50 விலைக்கு விற்கப்படுகிறது. மேலும் விலை உயரக்கூடும் என்று சொல்லப்படுகிறது.

புளி சீசன் கடந்த மார்ச் மாதம் ஆரம்பமான சமயத்தில் ரூ. 2-50 முதல் ரூ. 2-70க்கு கிடைத்தது. தென் பகுதிக்குப் புளியை அனுப்புவதில் முக்கிய நகரான மைசூரில் அப்போது விலை ரூ. 1-40 முதல் 1-80 வரை இருந்தது.

இந்த வருடம் புளி காய்ப்பு மிகவும் நன்ருக இருந்தது. விலை குறையும் என்று எதிர்பார்த்ததற்கு மாருக விலை அதிகரித்து விட்டது. சிலர் பதுக்கி வைத்திருக்கக்கூடும் என்று சொல்லப்படுகிறது.

சென்னை மார்க்கெட்டில் மார்ச் மாத மத்தியில் ரூ. 3-50 ஆகவும் மாதக் கடைசியில் ரூ 4 ஆகவும் இருந்தது. சென்ற இரு வாரங்களாக கிலோ ரூ. 5-50 ஆக உயர்ந்து இருக்கிறது.

# நாதசுரவித்வான் வீருசாமிபிள்ளை காலமானர்

சென்னை, ஏப். 21—பிரபல நாதசுர வித்வான் திருவிடைமருதூர் எஸ். வீருசாமிபிள்ளை வியாழனன்று காலமானுர். அவருக்கு வயது 73.

வீருசாமிபிள்ளை இம்மாதம் 16-ந் தேதி திருப்பதிக்குச் சென்றிருந்தார். அங்கு அவருக்கு பாரிசவாயு ஏற்பட்டது உடனே அவர் அங்கிருந்து வேலூருக்கு அழைத்துவரப்பட்டு வேலூர் கிறிஸ்தவ மருத்துவ கல்லூரி ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். வியாழனன்று அங்கு அவர் காலமானுர்.

வேலூர் ஆஸ்பத்திரியிலிருந்து அவரதுசடலம் அவரது சொந்த ஊரான திருவிடைமருதூருக்குக் கொண்டு செல்லப்பட்டது.

நாதசுர வித்வான் வீருசாமிபிள்ளை, 1959-ம் ஆண்டில் தமிழ் இசைச் சங்க மாநாட்டிற்குத் தலைமை தாங்கினுர்; அப்போது அவருக்கு 'இசைப் பேரறிஞர்' என்னும் பட்டம் வழங்கப்பட்டது. 1962-ல் சென்னை மியூசிக் அகாடமி அவருக்கு 'சங்கீத கலாநிதி' என்னும் பட்டத்தை வழங்கிக் கவுரவித்தது. 1966-ல் அவர் சங்கீத நாடக சங்கத்தின் விருதைப் பெற்றுர்.

திருவாங்கூர் சமஸ்தான ஆஸ்தான வித்வாஞகவும் திருப்பதி தேவஸ்தான ஆஸ்தான வித்வாஞகவும், வீருசாமிப் பிள்ளை இருந்தார். தமிழிசைக் கல்லூரியின் தற்போதைய முதல்வராகவும் அவர் பணியாற்றி வந்தார்.

வீருசாமிப் பிள்ளையின் மறைவுக்கு வருத்தம் தெரிவித்து அவரது மகன் சுப்பிரமணியத்துக்கு சென்னை தமிழிசைச் சங்கம் ஓர் அனுதாபச் செய்தியை அனுப்பியுள்ளது.

## சவானுடன் அமெரிக்க மந்திரி பேச்சு

புதுடெல்லி, ஏப். 21—நேற்று டெல்லிக்கு வந்து சேர்ந்த அமெரிக்கத் துணை மந்திரி கென்னத் ரஷ் நிதி அமைச்சர் சவானை சந்தித்து சுமார் 30 நிமிஷ நேரம் பேச்சுவார்த்தை நடத்திஞர்.

பி. எல். 480 ரூபாய் நிதிப் பிரச்னை, இருதரப்பு வர்த்தகம், சர்வதேச நாணய நிலைமை ஆகியவை பற்றி அவர்கள் இருவரும் பொதுவில் விவாதித்தனர்.

பி. எல். 480 ரூபாய் நிதியின் எதிர்காலம் பற்றி விவாதிக்க விரைவில் அமெரிக்க அதிகாரிகள் இந்தியாவுக்கு வருவர் என்று தெரிகிறது.

# ராணி அம்மாள் கடிதம் பற்றி முன்னரே தெரியும்: மந்திரி மாதவன் பேச்சு

சென்னை, ஏப். 21—அமைச்சர் மாதவன் சென்னையில் நேற்று நடந்த பொதுக் கூட்டத்தில் ராணி அம்மாளின் கடிதம் பற்றிக் குறிப்பிட்டு "இப்படி ஒரு சம்பவம் நடக்கும் என்று எங்களுக்கு முன்பே தெரியும்" என்றுர்.

"ராணி அம்மையார் விடுத்த அறிக்கை அவர்களின் உள்ளத்தில் இருந்த வார்த்தைகள் இல்லை என்றும் இது ஒரு மாஜித் தலைவரின் மாய வேலை" என்றும் அவர் குறிப்பிட்டார்.

நேற்று இரவு சென்னை திருவல்லிக்கேணி வெங்கட்ரங்கம் பிள்ளை தெருவில் நடந்த தி.மு கழக பொதுக் கூட்டத்தில் அமைச்சர் மாதவன் பேசுகையில் இவ்வாறு சொன்னுர்.

"பேரறிஞர் அண்ணுவின் குடும்பத்தையோ, அண்ணியார் அவர்களையோ யாரும் குறைத்துப் பேசக்கூடாது" என்று மாதவன் கேட்டுக் கொண்டார்.

மேற்படி கூட்டத்தில் அவர் பேசியதாவது:

எலக்ஷ முன்பே [illegible] நண்பர்கள், அண்ணியார் (ராணி அம்மையார்) விடுத்த அறிக்கை பற்றி குறிப்பிட்டார்கள்.

அதைச் சொல்லும்போது சிறிதும் ஆத்திரம் இல்லாமல் ஆதுரம் கொள்ளாமல் தரக் குறைவான சொற்களை பயன்படுத்தாமல் மிகவும் கண்ணியத்தோடு குறிப்பிட்டார்கள், இதுதான் அண்ணு நமக்குக் கற்றுத்தந்த பாடம்.

அண்ணு காட்டித்தந்த அந்தப் பெருந்தன்மையையும் பொறுமையையும் இப்போதும் நாம் நிச்சயம் கடைப்பிடித்தாக வேண்டும் என்றே கேட்டுக்கொள்கிறேன்.

உண்மையிலேயே அண்ணியார் எழுதியதாகக் கூறப்படும் அந்தக் கடிதத்தில் காணப்படும் வரிகள், வார்த்தை அமைப்புகள் அண்ணியார் அவர்களின் உள்ளத்தில் இருந்து வந்த வார்த்தை அல்ல.

அவர்கள் (ராணி அம்மையார்) எப்போதும் நம் பக்கம் தான் இருப்பவர்கள். அவர்கள் நம்மைவிட்டு விலகிச் சென்றுவிட்டதாக யாரும் கருதவேண்டாம். அதன் காரணமாக ஆத்திரப்பட வேண்டாம். ஆதுரம்கொள்ள வேண்டாம்.

இப்படியொரு சம்பவம் நடக்கும் என்று நமக்கு முன்பே தெரியும். இது ஒரு மாஜித் தலைவரின் மாய வேலைதானே தவிர, அந்தக் கடிதத்தில் உள்ளவை அண்ணியாரின் [illegible] நம்பத் தேவையில்லை.

அண்ணுவின் குடும்பம் நம் குடும்பம், அண்ணியார் என்றும் நம்மவர். எனவே, கழக தொண்டர்களை நான் கேட்டுக் கொள்வதெல்லாம் இதுதான்.

எந்தக்காரணத்தைக் கொண்டும் அண்ணுவின் குடும்பத்தைப் பற்றி தரக்குறைவாக பேசவோ எழுதவோ நம்மில் யாரும் முயலக்கூடாது. அண்ணுவின் உண்மைத் தம்பியர்களாக இருப்பவர்கள்

5-ம் பக்தி பார்க்க

(7-ம் பக்தி தொடர்ச்சி)

இதில் உறுதியாக இருக்க வேண்டும்.

இப்படியொரு சூழ்நிலை உருவாக்கி இதன் மூலம் நம்மை உணர்ச்சி வசப்படச் செய்து, அதனுல் நாம் அண்ணியைப் பற்றியோ அண்ணுவின் குடும்பத்தைப் பற்றியோ இழித்தும் குறைத்தும் பேச வேண்டுமென்று அந்த எதிரிகள் இதன்மூலம் நம்மிடமிருந்து எதிர்பார்த்திருக்கிருர்கள்.

புரட்சித்தலைவரும், மாஜித் தலைவரும் இந்த விஷயத்தில் ஏமாந்துதான் போவார்கள் என்பதை நிச்சயமாக நாம் அவர்களுக்கு உணர்த்தியாக வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் மாதவன் கூறினர்.

அவர் மேலும் கூறியதாவது—

தி. மு. கவை அழிக்க எந்த சக்தியாலும் முடியாது. ஆட்சியில் இருந்து வேண்டுமானல் எங்களை இறக்கிவிடலாம் என்று வைத்துக் கொள்வோம். ஆனல் மக்கள் மனதில் இருந்து எங்களை இறக்க முடியாது.

## எம். ஜி. ஆர். போட்ட கணக்கு

டெல்லியைத் தூண்டி விட்டு எதையும் சாதித்து விடலாம் என்று மட்டும் யாரும் கனவு காணவேண்டாம். அப்படி எம்.ஜி ஆர். போட்ட கணக்கு படிப்படியாக பொய்த்துக் கொண்டு வருகிறது.

டெல்லிக்காரனேபோடாத ஒரு கணக்கை இவர் போட்டுவிட்டதின் விபரீதத்தை எம். ஜி. ஆர். இப்போது அனுபவித்துக் கொண்டு வருகிருர்.

அப்படிய எம். ஜி. ஆர். நினைப்பதைப் போல் ஏதாவது நடந்துவிடும் என்று வைத்துக் கொண்டாலும், அதற்கான மாற்றுவழி எங்களுக்குத் தெரியும். அதிலிருந்து நமது மாஜிப் பொருளாளர் தப்பவே முடியாது.

பதவியிலேயே ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும் என்ற கணக்கில் நாங்கள் யாரும் இல்லை. ஒவ்வொரு முறை டெல்லிக்குப் போகும் போதும், நமது கொள்கையை — இலட்சியத்தை — உரிமையை நாம் வலியுறுத்தத் தவறவில்லை.

அப்படிப்பட்ட நாங்கள், ஆட்சியில் இருந்து அகற்றப்பட்டாலும், இந்த நாட்டுக்கு நாட்டு மக்களுக்காக டெல்லியில் போராடியே தீருவோம் என்று அமைச்சர் மாதவன் கூறினர்.

தமிழ்நாட்டில் சிமெண்ட் உற்பத்தி, நூற்பாலைகளின் தேவை ஆகியவற்றுக்காக மகாராஷ்டிர மாநில அரசு 1 லட்சத்து 60 ஆயிரம் யூனிட் மின்சாரம் வழங்க சம்மதித்திருக்கிறது.

நான் பம்பாய் சென்று அம் மாநில முதல்வர் வி. பி. நாயக்குடன் பேசினேன்! இதற்கான ஒப்பந்தம் ஆகியிருக்கிறது என்று இக்கூட்டத்தில் மாதவன் தெரிவித்தார்.

# ஆண்களை மலடாக்க மதுசாரம்

நியூயார்க், ஏப். 21—ஆல்கஹாலை ஊசி மூலம் செலுத்தி ஆண்களிடம் 6 மாத காலத்துக்குத் தற்காலிகமாக மலட்டுத் தன்மையை ஏற்படுத்த முடியும் என்று கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

ஆல்கஹாலை விரையின் மூலம் [illegible]ந்து நாளத்தில் செலுத்தினுல் ஆண்களிடம் மலட்டுத் தன்மையை ஏற்படுத்த முடியும் என்று ஆராய்ச்சி மூலம் கண்டறியப்பட்டுள்ளது என்று அமெரிக்காவில் அட்லாண்டிக் நகரில் நடந்த உயிரியல் [illegible]ர்கள் மாநாட்டில் நிபுணர்கள் தெரிவித்தனர்.

எனினும் இதுவரை இப்பரிசோதனைகள் எலிகளிடமும் நாய்களிடமும் மட்டுமே நடத்தப்பட்டுள்ளன.

முன்னேறும் நாடுகளில் கருத்தடை செய்துகொள்ள இம்முறை வாய்ப்பளிக்கிறது என்று மாநாட்டில் பேசிய நிபுணர் ஒருவர் கூறினுர்.

